(*b*) The Government of India requested this Government to make certain preliminary investigations and conduct a traffic survey at the Port. Accordingly boring operations in the sea have been undertaken and the work is expected to be completed by the end of August 1958. The Chairman, National Council of Applied Economic Research Institute, New Delhi, is being requested to undertake a traffic survey for assessing the traffic potentialities at the Port.

SRI S. LAZAR : இப்பொழுது 2 நாட்களாக இது சம்பந்தமாக ஏதோ அதிகாரிகள் கல்கத்தாவிலிருந்து இங்கு வந்திருப்பதாகச் சொல்லப்படுவது உண்மைதானா ? அவர்கள் இதை பரிசீலனை செய்து எப்பொழுது முடிப்பார்கள் ?

THE HON. SRI P. KAKKAN : அம்மாதிரி அதிகாரிகள் வந்து போனது உண்மைதான். எப்பொழுது முடியும் என்று தெரியாது. இருந்தாலும் இப்பொழுது 9 போரிங்தான் முடிந்திருக்கிறது. இன்னும் 20 போரிங் போட்டு பார்க்கவேண்டுமென்பது உத்தேசம். அதைத் தவிர "ஹையர் ஐலண்டில்" மேலும் 15 போரிங் போடவேண்டும் என்று சொல்லப்படுகிறது.

SRI A. V. P. ASAITHAMBI : தூத்துக்குடி துறைமுகத்தை அபிவிருத்தி செய்வதற்காக வெளிநாட்டிலிருந்து வல்லுனர்கள் வருவதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்திருப்பதாக அமைச்சர் அவர்கள் தூத்துக்குடி தேர்தல் சமீபத்தில் நடந்தபொழுது அந்த இடத்திலே அறிவித்தார். அது உண்மையானால், அவர்கள் வந்து விட்டார்களா ? அதுபற்றி என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் மந்திரி பக்கத்திலிருந்து அவர் சொன்னதை நேராகக் கேட்டதுபோல் சொன்னார். ஏற்கனவே அன்னியர்கள் வந்து பார்த்துவிட்டு போய்விட்டனர் என்று சொன்னேனே தவிர, இனி வருவார் என்று சொல்லவில்லை என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

SRI A. GOVINDASAMY : தூத்துக்குடி துறைமுகம் மேஜர் துறைமுகமாக்கப்படுமா ? அதற்கு எவ்வளவு ரூபாய் செலவு ஆகும் ? அப்பொழுது அதற்கு வ. உ. சி.-யின் பெயர் இடப்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அது பற்றி தனியாக கேள்வி போட்டால் முழு விவரமும் சொல்லக்கூடும்.

### *Panchayts*

* 314 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லாவிலே எத்தனை Class I, Class II பஞ்சாயத்துப் போர்டுகள் இருக்கின்றன ?

(ஆ) எத்தனை பஞ்சாயத்து போர்டுகளிலே ஹரிஜனங்களுக்கு ரிசர்வேஷனில் அங்கத்தினர் ஸ்தானங்கள் ஒதுக்கப்படவில்லை ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) There were 31 Class I panchayats and 498 Class II panchayats in the Coimbatore district on 1st June 1958.

(*b*) In 42 panchayats seats have not been reserved for members of the Scheduled Castes.

[19th September 1958

SRI P. G. MANICKAM: 42 பஞ்சாயத்து போர்டுகளில் ஹரிஜனங்களுக்கு தனிப்பட்ட ஸ்தானங்கள் ஒதுக்கப்படாததற்கு காரணங்கள் யாவை ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: எந்த இடங்களில் 50 சதமானத்திற்கு அதிகமாக ஹரிஜனங்கள் இருக்கிறார்களோ, அங்கே அவர்களுக்கு தனியாக ஸீட்கள் ஒதுக்கப்படுவதில்லை. அதுவுமன்றி பஞ்சாயத்து மொத்த அங்கத்தினர்களில் ஐந்தில் ஒரு பாகத்திற்கு மேல் ஹரிஜனங்களுக்கு தனிப்பட்ட இடம் ஒதுக்கப்படுவதில்லை. இதற்கு மேலாக ரிஸர்வேஷன் அவசியமில்லை என்று நான் கருதுகிறேன்.

*Ministers Tour.*

* 315 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR (on behalf of Sri D. S. Authimoolam): கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா :—

(அ) 1958-ம் வருஷம் எப்ரல் மாதம் 15-ம் தேதிக்குமேல் மே மாதம் முடிய கன்னியாகுமரி ஜில்லாவுக்கு எத்தனை மந்திரிகள் விஜயம் செய்தார்கள் ?

(ஆ) அவர்கள் பெயர்கள் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) 6 (six); and

(*b*) they are, Srimathi Lourdhammal Simon, Sri R. Venkataraman, Sri M. Bhaktavatsalam, Sri C. Subramaniam and Sri M. A. Mnickavelu of this State and Sri Humayun Kabir, Union Minister for Scientific Research and Cultural Affairs.

*Karaneeswarar Temple*

* 316 *Q.*—SRI K. VINAYAKAM: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether it is a fact that the trustees for Sri Karaneeswarar temple, Saidapet, Madras, should be only from one particular community, viz., Sengunda Mudaliars;

(*b*) whether there is any proposal to appoint non-Sengundavars as Trustees to the temple; and

(*c*) what is the procedure adopted for the appointment of the trustees to the temple?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Yes, Sir. The trustees at present belong to the community of Sengunthar.

(*b*) Yes.

(*c*) According to the scheme framed for the temple by the Sub-Court, Chingleput, in 1924, there shall be three Executive Trustees who shall be elected by an "electoral college" consisting of members of the Sengunthar community permanently residing in Karani village and qualified to be electors by satisfying the several conditions stipulated in the scheme. The elections are held in conformity with the rules relating to Municipal elections, subject to such notifications as may be introduced by the electors or by Court and they are always conducted by ballot. The first three persons